REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




● மலர்: 3 சென்னை 13—8—1979 திங்கள் (★) ❋ ● ❋ (✶) வெளியூர் 14--8--1979 செவ்வாய் (●) இதழ்: 296 ●

★ ஒரு கோடி முத்தரையர் கோரிக்கை ஏற்பு - உணவு விடுதியில் குவளையில் டீ கொடுத்தால்... எச்சரிக்கை ★ பிற்பட்டவர் பட்டியலில் உயர் ஜாதியைச் சேர்த்து கருணாநிதி செய்த துரோகம் ★ கருணாநிதி ஆட்சியில் எம். பி. பி. எஸ். இடத்துக்கு ரூ. 50 ஆயிரம் பெற்ற கொடுமை ★ கருணாநிதியின் போராட்டத்தை சந்திக்கத்தயார் ★ வயதுவந்த ஆதரவற்ற அனைவருக்கும் உதவி ★ 2 ஆண்டில் ஏழைகளுக்கு லட்சக் கணக்கான வீடுகள்.

# பிற்படுத்தப்பட்டோருக்கு கருணாநிதி செய்த துரோகம்



## புரட்சித் தலைவர் அம்பலப்படுத்தினார்

புதுக்கோட்டை, ஆக. 13- உயர்ந்த சாதியினரை பிற்படுத்தப்பட்டவர் பட்டியலில் சேர்த்து, பிற்படுத்தப்பட்ட ஏழை, எளிய மக்களுக்கு கருணாநிதி மிகப் பெரிய துரோகம் செய்தார் என்பதை முதல்வர் புரட்சித்தலைவர் லட்சோப லட்சம் மக்களின் ஆரவாரத்திற்கு மத்தியில் அம்பலப்படுத்தினார்.

கருணாநிதியின் துரோகச் செயல் பற்றி அறிந்ததும் மக்கள் 'வெட்கம்.. வெட்கம்' என்று குரல் எழுப்பினர்.

கருணாநிதி நடத்த இருக்கும் போராட்டத்தைச் சந்திக்கத் தயார் என்றும் புரட்சித்தலைவர் முழக்கமிட்டார்.

லட்சக்கணக்கில் திரண்ட முத்தரையர் மாநில மாநாடு நேற்று புதுக்கோட்டையில் சிறப்பாக நடந்தது.

புதுக்கோட்டை தடி கொண்ட அய்யனார் கோயில் திடலில் இந்த மாநாடு நேற்று காலை முதல் இரவு வரை நடந்தது.

இந்த மாநாட்டில்முதல்வர் புரட்சித் தலைவர் அமைச்சர்கள் எஸ். டி. எஸ்., ஜி. ஆர். எட்மண்ட் ஆகியோர் பேசினார்கள்.

குழ. செல்லையா, சட்டமன்ற துணை சபாநாயகர், திருநாவுக்கரசு, கோவேந்தன் எம். எல். ஏ, கு. ப. கணேசன் மற்றும் பலர் பேசினார்கள்.

முத்தரையர் மாநாட்டில் கலந்து கொண்டு முதல்வர் புரட்சித் தலைவர் பேசியதாவது:-

இன்றையதினம் இங்கே லட்சக்கணக்கில் கூடி இருந்து மாபெரும் பிரச்சினையை எடுத்துச்சொல்லும் வகையில் உங்களது குறைகளைக் கேட்கவும்-விவாதம் நடத்துவது போல் உங்கள் கருத்துக்களை அறியவும் அதன் பிறகு எங்கள் நிலையை அறிவிக்கவும் இந்த மாநாடு வாய்ப்பு அளித்துள்ளது.

லட்சக் கணக்கில் கூடி இருக்கும் உங்களது உள்ளத்தில் முதலில் ஒரு கேள்வியைக் கேட்டுப் பதிலைப் பெற விரும்புகிறேன்.

நான் இங்கே இந்த மாநாட்டுக்கு வரும் போதே குழ. செல்லையா உங்களது மாநாட்டுத் தீர்மானங்களை என்னிடம் தந்தார்.

அவைகளை நான் காரில் வரும்போது படித்துப் பார்த்தேன். ஆகவே உங்களது மாநாட்டுத் தீர்மானங்களை நான் அறிவேன்.

லட்சக்கணக்கில் கூடி இருக்கும் உங்கள் சமுதாயத்தினர் தமிழகத்தில் கோடிக்கணக்கில் இருப்பதாக புள்ளி விவரங்கள் இருக்கின்றன.

இங்கே பேசிய குழ. செல்லையா ஒரு கோடியே ஒரு லட்சம் பேர்கள் தமிழகத்தில் இருப்பதாக தெரிவித்தார்.

ஒரு கோடி மக்கள் இருந்தும் நீங்கள் சம்பாதிக்கும் பணத்தைக் கொடுத்து டீ அல்லது காப்பி சாப்பிடச் சென்றால் என்ன நிலை இருக்கிறது!

### குவளையில் டீ தரும் இழிநிலை

குவளையில் டீ - காப்பி குடிக்கும் நிலையை சில இடங்களில் உயர்ந்தஜாதியினர் வைத்து இருக்கிறார்கள்.

இதற்குக் காரணம் என்ன? உங்களிடம் ஒற்றுமைஇல்லாததேகாரணம் என்பதை உணர்கிறீர்களா? இல்லையா? இது எனது முதல் கேள்வி,

மனம் விட்டுச் சொல்கிறேன். சமுதாயத்தில் நீங்கள் ஒற்றுமைஇல்லாது இருப்பதால் உங்களை ஏமாற்ற முடியும் என்று கருதுகிறார்கள். நீங்களும் ஏமாறுகிறீர்கள்.

சட்டத்தை மீறி இப்படி சில இடங்களில் நடை பெறுகின்றது.

தமிழகத்தில் இப்படிப்பட்ட இழிநிலை எங்காவது இருந்தால் உடனடியாகக் காவல்துறையினரிடம்தெரிவியுங்கள்- உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

### நடவடிக்கை எடுக்கத் தயார்

அப்படிப் புகார் செய்து காவல்துறையினர் நடவடிக்கை எடுக்காமல் இருந்தால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்பதை திட்டவட்டமாகத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே நீங்கள் முதலில் உறுதியாக இருக்க வேண்டும்.

எதையாவது சொல்லி கைதட்டல் பெற்று மாலைகளைப் பெற நாங்கள் பதவியில் இருக்கவில்லை.

உணவு விடுதிகளிலும் இப்படி ஏற்றத்தாழ்வு காட்டினால்- எல்லோரையும் சமமாகக் கருத மறுத்தால் தண்டனை அளிக்க சட்டம் இருக்கிறது.

அருப்புக்கோட்டை போன்ற சில பகுதிகளில் இப்படிப்பட்ட செயல்கள் இருப்பதாக சொன்னார்கள். இது உங்களுக்கும் வெட்கமான செய்தி. எங்களுக்கும் வெட்கமான செய்தி.

இதுபற்றி அதிகாரிகளும் தகவல் தரவில்லை. நீங்களும் தகவல் தரவில்லை. இது வேதனைக்குரியது.

இப்படிப்பட்ட தகவலைத் தந்து விட்டு பிறகு அந்த ஊரில் இருக்க முடியுமா? பெரும் பணக்காரர்கள் தொல்லை தருவார்களே, வாழ முடியுமா? என்ற கேள்வி எழுந்தால் உங்களை நீங்கள் ராமச்சந்திரனாக நினைத்துக் கொள்ளுங்கள்.

### அனைவரும் முதல்வராக மாறுங்கள்

இந்தவிஷயத்தில் முதல்வராக நினைத்துக்கொள்ள உங்களுக்கு உரிமை இருக்கிறது.

உங்களுக்காகத்தான் நான் முதலமைச்சராக இருக்கிறேன். இதனை நாலரைக் கோடி தமிழர்கள் சார்பில் சொல்கிறேன். இதனைப் பத்திரிகைகளும்அப்படியே வெளியிடும் என்று நினைக்கிறேன்.

இது அரசின் கருத்து. முதலமைச்சரின் கருத்து. தமிழகத்தின் கருத்து.

படிக்கத் தெரியாதவர்கட்கும் இதனைப் படித்தவர்கள் படித்துச் சொல்ல வேண்டும்.

இந்தமாநாடு இவ்வளவு அமைதியாக நடப்பது கண்டு பெருமைப்படுகிறேன். எங்களை விட எதிர்க்கட்சியினர் இதனை உணர இதைவிட வேறு அடையாளம் இருக்க முடியாது.

இங்கே பல தீர்மானங்களை நிறைவேற்றி இருக்கிறீர்கள்.

அவைகளில் சிலவற்றை இங்கே படிக்க விரும்புகிறேன். இதில் 3-வது தீர்மானம் மிக முக்கியமானது ஆகும்.

''கொங்கு வேளாளர்களின் பல்வேறு பட்டப் பெயர்களையும் இணைத்து கொங்கு வேளாளர் என்று ஒரே ஜாதியாக அறிவித்ததைப் போல முத்தரையர், முத்திரியர் முத்துராஜா, முடிராஜ்-வலையர், அம்பலம், அம்பலகாரர், பூசாரி, சேர்வை இப்படி 22 பட்டப்பெயர்களில் வாழ்ந்து வருபவர்களை முத்தரையர் என்று ஒரே ஜாதியாக அழைக்க வேண்டும்'' என்று கோரி இருக்கிறீர்கள்.

### கோரிக்கை ஏற்கப்படும்

இதனை நீங்கள் அனைவ

(3-ம் பக்கம் பார்க்க)

## அரசுக்கு ஆசிரியர் சங்கம் பாராட்டு

காஞ்சிபுரம், ஆக. 13- பிற்பட்டோர் சலுகை குறித்து அரசு பிறப்பித்த உத்தரவால் ஏழை எளிய மக்கள் பொருளாதார ரீதியில் அடித்தளத்தில் உள்ள சாதாரண மக்கள் முன்னேறும் வாய்ப்பினைப் பெற்றுள்ளனர். இந்த உத்தரவு பிறப்பித்த அரசுக்கு பாராட்டும் நன்றியும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று அனைத்திந்திய ஆசிரியர் சங்கம் கூறியுள்ளது.

## காளிமுத்து கட்டுரை

4-ம் பக்கம்

## நியாயம் வலிவைச் சேர்க்கும்

Let us have faith that right makes might, and in that faith let us to the end dare to do our duty as we understand it.

நியாயம் வலிவை சேர்க்கும் என்பதில் நம்பிக்கையுறுவோம். அந்நம்பிக்கையில் இறுதி வரை நமது கடமைகளை நாம் உணர்ந்தவாறு நிறைவேற்ற துணிவுடன் செயல்படுவோம்.

-ஆபிரகாம் லிங்கன்

பாகுபாடே பார்க்காமல் இருப்பது நல்லதுதான். சில விஷயங்களில் பாகுபடுத்தத்தான் வேண்டியிருக்கிறது. நெல்லும், பதரும் ஒன்றாகத்தான் இருக்கும். நெல்லைப் பாகுபடுத்திப் பார்க்கத்தான் வேண்டும். கல்லும் அரிசியும் ஒன்றாகத்தான் இருக்கும். கல்லை அரிசியிலிருந்து விலக்கத்தான் வேண்டும்.

-அண்ணா

பொருளாதார ஏற்றத் தாழ்வு மட்டுமே இருந்தால் ஏழை, பணக்காரர் என்ற பாகுபாடு போதும். சமூக வேறுபாடு மட்டுமே இருந்தால் பின்தங்கிய ஜாதி, முன்னேறிய ஜாதி என்ற பாகுபாடு போதுமானது.

ஆனால் ஒரு சமுதாயம், சமூகம், பொருளாதாரம் ஆகிய இரண்டு வேறுபாடுகளையும் கொண்டிருந்தால் என் செய்வது?

### அமைச்சர் பண்ருட்டிராமச்சந்திரன்

அறிவும், ஆழ்ந்த சிந்தனையும் கொண்ட பகுத்தறிவின் அடிப்படையில் கீழ்க்கண்டவாறு பாகுபடுத்துவதே சரியானது.

1. ஏழைகள், மேலும் பின்தங்கிய ஜாதியினர்
2. இதர ஏழைகள்
3. இதர பின்தங்கிய ஜாதியினர்
4. மற்ற முன்னேறிய ஜாதியினர்

பெற்றோர்க்கு நான்கு பிள்ளைகள் உண்டு. மூத்தவன் குறை ஏதும் இல்லாதவன்-தன்னைத்தானே பார்த்துக் கொள்வான்.

அடுத்தவன்-நல்ல உடற்கட்டு- ஒரு கால் மட்டும் சிறிது ஊனம். பார்ப்பதற்கு தெரியும். நடப்பதற்கு பிறர் துணை தேவையில்லை.

மூன்றாமவன் - கண்கள் மட்டும் குருடு - துணை கொண்டு எதையும் செய்ய முடியும்.

நான்காமவன்-கடைக்குட்டி-கண்கள் குருடு மட்டுமல்ல, முடவனாகவும் பிறந்துவிட்டான். தானே எதையும் செய்துகொள்ள இயலாது. பிறர் தான் எல்லாம் செய்யவேண்டும்.

இந்த வீட்டின் நிலையே இன்றைய நம் நாட்டின் நிலை.

கடைக்குட்டி மீது பெற்ற தாய் மிக்க அக்கறை செலுத்துவது பாசம் மட்டுமல்ல, பகுத்தறிவுங்கூட.

பின்தங்கிய ஏழைகள் மீது புரட்சித்தலைவர் கருணை காட்டுவது தாய்ப்பாசம் மட்டுமல்ல, சமூக அமைப்பு பற்றிய விஞ்ஞான கண்ணோட்டமுங்கூட.

முதற்பிள்ளை மீதோ அல்லது அடுத்த பிள்ளை மீதோ தாய் அதிக கவனம் செலுத்த இயலவில்லை என்றால் பாசம் இல்லை என்பதாலல்ல. பணி தேவைப்படவில்லை என்பதால்.

புரிந்தவர்களுக்குப் புரியும்; புரிந்து கொள்ள மறுப்பவர்களுக்குப் புரியத் தேவையில்லை.

தமிழகத்தில் வேறெதற்குப் பஞ்சமிருந்தாலும்,

( 2-ம் பக்கம் பார்க்க )

### ஏவி. எம். மறைவு:

## கலையுலகம் அறச் செல்வரை இழந்தது: நாவலர் இரங்கல்

சென்னை, ஆக. 13.கலையுலகம் அறச்செல்வரை இழந்துவிட்டது என்று கழகப் பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் இரங்கற்செய்தி வெளியிட்டுள்ளார்.

டாக்டர் நாவலர் வெளியிட்டுள்ள இரங்கற் செய்தியில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

தமிழ்த் திரைப்பட உலகத்தின் தனிப்பெரும் வழிகாட்டியாக விளங்கியவரும், புகழும் பெருமையும் மிக்க தமிழ்த்திரைப் படங்கள் வெளிவரக் காரணமாக இருந்தவரும் புகழொளி மிக்க நடிகர்-நடிகைகள் பலரைத் திரைப்பட உலகிற்கு அறிமுகப்படுத்தியவரும் அகில இந்திய அளவில் பல மொழித் திரைப்படத் தயாரிப்பாளர் என்று பெயர் பெற்றவரும் ஆன ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் இயற்கை எய்திய செய்தி கேட்டு மிகவும் துயருற்றேன்.

திரு. ஏ. வி. மெய்யப்பன் அவர்கள் உழைப்பால் உயர்ந்தவர். விடா முயற்சி கொண்டவர்; செய்வன திருந்தச் செய்பவர், நாணயமானபோக்கு கொண்டவர், நேர்மையான பண்பு கொண்டவர் அடக்கமானவர், அமைதியானவர் எளிமைத்தோற்றம் கொண்டவர்: அறவுள்ளம் படைத்தவர் அறநெறிச் செயல்கள் பல ஆற்றியவர். அத்தகையவரின் இழப்பு தமிழகத்திற்கு ஒரு ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும்.

அறநெறிச்செல்வர் திரு. ஏ,வி. மெய்யப்பன் அவர்களை இழந்து வருந்தும் அவரது குடும்பத்தினர்க்கும், உற்றார் உறவினர்க்கும், உரிய நண்பர்களுக்கும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் சார்பாக ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாழ்க ஏ.வி.எம். புகழ். வாழ்க அவர்தம் அறச் செயல்கள்.

இவ்வாறு கழகப் பொது செயலாளர்டாக்டர் நாவலர் தனது இரங்கற் செய்தியில் தெரிவித்துள்ளார்.

# கலைமேதை ஏவி. எம். காலமானர்

சென்னை, ஆக. 13-படஅதிபர் கலைமேதை ஏவி. மெய்யப்பன் நேற்று இரவு 9-30 மணிக்கு சென்னையில் மரணம் அடைந்தார். இறுதி ஊர்வலம் இன்று (திங்கள்) மாலை நடக்கிறது.

கலையுலகின் முன்னேடியாக விளங்கிய ஏவி.எம். மறைவினல் கலையுலகத்தினர் பெரும் துயரத்தில் ஆழ்ந்துள்ளனர்.

ஐந்து நாட்களுக்குமுன் அவருக்குமஞ்சள் காமாலை நோய் ஏற்பட்டது. அத்துடன் நிமோனியா காய்ச்சலும்சேர்ந்துகொண்டது. இதன்காரணமாகதனியார் மருத்துவமனை ஒன்றில் சேர்க்கப்பட்டார். அங்கு அவருக்கு தீவிர சிகிச்சையளிக்கப்பட்டது. நேற்று முன்தினம் அவருக்கு ஓரளவு குணம் ஏற்பட்டது. ஆனல் நேற்று அவருக்கு மீண்டும் உடல் நிலை மோசம் அடைந்தது. இரவு 9-30 மணிக்கு அவர் மரணம் அடைந்தார்.

அப்போது அவரது மனைவி ராஜேசுவரி அம்மாள், மகன்கள் முருகன், குமரன், சரவணன், பாலசுப்பிரமணியம், மகள் மீனு ஆகியோர் அருகில் இருந்தனர்.

ஏவி. மெய்யப்ப செட்டியார் உடல் சென்னை, மயிலாப்பூர் எட்வர்டு எலியட்ஸ் சாலையில் உள்ள அவர் வீட்டுக்குக்கொண்டு போகப்பட்டது.

## ஆர்எம்வீ. அஞ்சலி

செய்தி அறிந்ததும் உடனே விரைந்து சென்று அமைச்சர் ஆர். எம். வீ. இறுதி மரியாதை செலுத்தினர்.

போலீஸ் ஐ. ஜி. பரமகுரு, நீதிபதி இஸ்மாயில் டைரக்டர்கள் பஞ்சு, திருலோக்சந்தர், டி. ராமானுஜம், நடிகர் மனேகர் ஆகியோரும் மரியாதை செலுத்தினர்.

இறுதி ஊர்வலம் (இன்று) திங்கள் மாலை நடக்கிறது. ஊர்வலம் ஐ.ஜி. ஆபீசு பின்புறம் உள்ள இடுகாட்டை அடையும். அங்கு அவரது உடல் எரியூட்டப்படும்.

## வாழ்க்கை குறிப்பு

ஏவி. மெய்யப்ப செட்டியார் காரைக்குடியில்பிறந்தார்.

தந்தை பெயர் ஆவிச்சி செட்டியார். முதலில் கிராமபோன் தயாரிப்பு விற்பனை தொழிலில் ஈடுபட்டார். சரஸ்வதி ஸ்டோர்ஸ் இவரால் தொடங்கி வைக்கப்பட்ட நிறுவனமாகும்.

திரைப்படத் தொழிலில் ஈடுபட்டு சபாபதி, நந்தகுமார், ஸ்ரீ வள்ளி, வாழ்க்கை, ஓர் இரவு, குலதெய்வம், உயர்ந்த மனிதன், அன்பேவா, போன்ற நூற்றுக்கு மேற்பட்ட படங்களை அவர் தயாரித்தார்.

டி. ஆர். மகாலிங்கம், வைஜயந்திமாலா, கமலஹாசன், டி. ஆர். ராமச்சந்திரன், ஏவி. எம். ராஜன் போன்ற பல கலைஞர்களை அறிமுகப்படுத்தியது இவர்தான்.

இந்தியாவிலேயே முதன் முதலாக ஆடல் பாடல் இல்லாமல் "அந்தநாள்" என்ற பெயரில் படம் எடுத்ததும் இவர்தான். தமிழகத்தில் இந்திப்படங்களைத் தயாரித்து சாதனை புரிந்தார். பாரதியார்பாடல்களுக்கு முழு உரிமையும் பெற்றிருந்த அவர் அவைகளை பொதுமக்கள் உடைமையாக்கினர்.

சென்னையில் அவர் அமைத்த நவீனமான ஏவி. எம். ஸ்டுடியோ மிகவும் புகழ்பெற்றதாகும். இந்தியாவிலேயே முதன் முதலாகக் குழந்தைகள் படத்தைத் தயாரித்ததும் அவர்தான்.

அவருக்கு 5 மகன்களும் 6 மகள்களும் உள்ளனர்.

## ஆர்.எம்.வீ. இரங்கல்

அமைச்சர் ஆர். எம். வீ.வெளியிட்டுள்ள இரங்கல் செய்தியில் தெரிவித்திருப்பதாவது:

''தென்னிந்திய திரைப்பட உலகில் பழைய தலைமுறையின் கடைசி சின்னமாக விளங்கியவர் இன்று நம்மை விட்டுப் பிரிந்து விட்டார்.

தமிழ் நாட்டின் பெருமையை இந்தியத் துணைக்கண்ட திரைப்பட உலகில் நிலை நாட்டிய மாபெரும் கலைஞர் அவர்.

அரை நூற்றுண்டு கால தென்னிந்திய கலை உலக வரலாறு தான் அவருடைய வாழ்க்கையும் வரலாறும். திட்டமிட்ட கடும் உழைப்பினல் சிறப்புகளைப் பெற்ருர். புகழின் சிகரத்தை அடைந்தார்.

சமீபகாலத்தில் திரை உலகம் கரைந்து வருவதைக் கண்டு வருந்தினர். ஆனல் ஒரு கலையுலகத் தலைமகனல் மீண்டும் காப்பாற்றப்பட்டு ஒளி பெற்றுத் திகழ்வதைக் கண்டு களிப்புற்ருர்-வாழ்த்தினர். ஆனல், அந்த மகிழ்ச்சியை முழுமையாக அனுபவிக்க விடாமல் இயற்கை அவரை அணைத்துக் கொண்டது.

கட்டுப்பாடு, கடமை உணர்ச்சி, கண்ணியமான செயல் முறை இவைகள் தான் ஏவி. எம். நமக்குக் கற்றுத் தந்த பாடம். அவருடைய தூய வழியைப் பின்பற்றி கலையுலகில் புதிய சாதனைகளை ஏற்படுத்துவது தான் கலையுலகுக்கும் அவருக்கும் தரும் காணிக்கை.

அவரைப் பிரிந்து ஆற்ருெணு துயரடைந்துள்ள அவருடைய துணைவியாருக்கும், புதல்வர்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தைக் காணிக்கையாக்குகிறேன்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. குறிப்பிட்டுள்ளார்.

## கடைசிப் பேட்டி

ஏவி. மெய்யப்ப செட்டியாருக்கு இப்பொழுது 72 வயதாகிறது.

சீர்காழி கோவிந்தராஜன் லண்டலின் நடத்திய இசை நிகழ்ச்சிகள் அடங்கிய இசைத்தட்டு வெளியீட்டு விழாவில் தான் கடைசியாக அவர் கலந்து கொண்டார்.

மருத்துவமனைக்குச் செல்வதற்கு முன்னதாக பேரறிஞர் அண்ணு பதிப்பகத்தின் சார்பில் வெளிவர இருக்கும் ''புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்'' என்ற புத்தகத்திற்காகத்தான் அவர் கடைசியாகப் பேட்டியளித்தார்.

கலையுலகில் பலருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்த அவர் மறைவு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும்.

## எஸ்.டி.எஸ். இரங்கல்

திரைப்பட அதிபர் ஏ.வி.மெய்யப்பச்செட்டியார் மறைவுக்குவருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தனது இரங்கலைத் தெரிவித்துள்ளார்.

அவரை பிரிந்து வாடும் அவரது துணைவியாருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துள்ளார்.

சீர்காழி கோவிந்தராஜன் இசைத்தட்டு வெளியீட்டு விழாவில்தான் கடைசியாக ஏவி.எம். கலந்து கொண்டார்.

## அரசு ஸ்டுடியோ அனுதாபம்

பிரபல தமிழ் திரைப்பட இயக்குனர், தயாரிப்பாளர் படப்பிடிப்பு நிலைய உரிமையாளர் ஏவி.எம். காலமானதையொட்டி தமிழ்நாடுஅரசு ஸ்டுடியோஸ், தமிழ்நாடு திரைப்படப் பிரிவு, திரைப்படதொழில் நுட்பக் கல்லூரி ஆகிய நிறுவனங்களைச் சார்ந்த ஆசிரியர்கள், பணியாளர்கள், மாணவர்கள் அனைவரும் தங்கள் தலைவர் இயக்குனர் ப. நீலகண்டன் தலைமையில் இன்று (திங்கள்) காலை 10மணிக்குக் கூடி இரங்கல் தீர்மானம் ஒன்றினை நிறைவேற்றினர்.

தமிழ்நாடு அரசு ஸ்டுடியோவில், தமிழ் நாடு திரைப்பட பிரிவு, திரைப்பட தொழில் நுட்பக் கல்லூரி ஆகியவற்றின் தலைவர் ஆசிரியர்கள், பணியாளர்கள், மாணவர்கள் அனைவரும் இந்த ஈடு செய்ய முடியாத பேரிழப்பிற்கு தங்களது ஆழ்ந்த இரங்கலையும் அனுதாபத்தினையும் அன்னரது குடும்பத்தினருக்கு தெரிவிக்கும் வகையில் தீர்மானம் நிறைவேற்றினர்.

அவருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அனைவரும் ஒரு நிமிடம் அமைதியாக எழுந்து நின்று அஞ்சலி செலுத்தினர்கள்.

ப.உ.ச., டைரக்டர் பாலச்சந்தர், சுந்தர்லால், நகாதர் ஆகியோரும் ஏவி. எம்.இல்லத்திற்குச்சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

எஸ் டி எஸ். இரங்கல்

## துரை கோவிந்தராஜன் பெரிய தகப்பனர் காலமானர்

சென்னை, ஆக. 13-தமிழ் நாடு அரசு தலைமைக்கொறடா துரை கோவிந்தராசனின் பெரிய தகப்பனர் நாராயணசாமி காளிங்கராயர் நேற்று (ஞாயிறு) மாலை இயற்கை எய்தினர்.

அன்னரது மறைவிற்கு தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்து, தந்திஅனுப்பியுள்ளார்.

### மறைவு

கழகப்பேச்சாளர் மான கிரிபாண்டியனின் தந்தை மாயாண்டி கடந்த 6-ந் தேதி காலை காலமானர். அவருக்கு வயது 70. இறுதிச் சடங்கில் ஏராளமான கழகத்தோழர்கள் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தினர்

## மருத்துவக் கல்லூரி பேட்டி தொடக்கம்

சென்னை, ஆக. 13- தமிழகத்தில் உள்ளமருத்துவக் கல்லூரிகளில் மாணவ-மாணவிகளைச் சேர்ப்பதற்கான நேர்முகப் பேட்டி இன்று தொடங்கியது.

விண்ணப்பம்செய்துள்ள மாணவ மாணவியரை பேட்டி காண்பதற்காக 5 குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

நேர்முக பேட்டி முடிந்த பிறகு தேர்வு பெற்ற மாணவ மாணவியரின்பட்டியல் வெளியிடப்படும்.

இந்த ஆண்டு மருத்துவக் கல்லூரியில் சேர்வதற்காக 6-ஆயிரத்து500பேர் மனுச் செய்துகொண்டிருக்கிருர்கள்.

## பண்ருட்டி கட்டுரை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஏழைகளுக்குப் பஞ்சமில்லை.

**இந்தியாவில் உள்ள 10 ஏழைகளில் ஒரு ஏழை வாழ்வது தமிழகத்தில். ஆனல், இந்தியாவில் உள்ள 22 மாநிலங்களில் ஒரு மாநிலம் தமிழகம்.**

இந்தியாவின் சராசரி ஏழைகள் விகிதத்தைவிட தமிழகத்தில் ஏழைகள் விகிதம் அதிகம். நகர்ப்புறங்களில் இந்தியா முழுமைக்கும் **100க்கு 41 பேர்** ஏழைகள். ஆனல் தமிழகத்தில் இவர்கள் **100க்கு 45.47 பேர்.** கிராமப்புறங்களில் இந்தியா முழுவதற்குமாக ஏழைகள் **100-க்கு 48 பேர்,** தமிழகத்தில் இது **57.48.**

**இது 1976-77-ம் ஆண்டு கணக்கு. இதன்படி தமிழகத்தில் ஏழைகள் இரண்டரை கோடிப் பேர்.** ஏழைகளின் தொகை கடந்த பல ஆண்டுகளாக வளர்ந்தது. **விரைவான வளர்ச்சி 72-ம் ஆண்டுக்குப் பிறகு,**

ஒரு நண்பர் இதைப் பற்றி வேடிக்கையாகக் கூட குறிப்பிட்டார்.

'ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்" என்ருர் அண்ணு. ஏழைகளே இல்லாவிடில் ஏழையின் சிரிப்பும் இராது, இறைவனையும் காண முடியாது எனக் கருதியோ, என்னவோ எங்கு நோக்கினும் ஏழைகளை உருவாக்கி விட்டாரா' கலைஞர் என்ருர்.

வேடிக்கையாக இருந்தாலும், ஏழைகளின் எண்ணிக்கை வளர்ந்து வருவது வேதனைக்குரியது.

**நகர்ப்புறத்தில் மாதம் ஒன்றுக்கு ரூ. 64-க்கு குறைவாக வருமானம் பெறுபவர் ஏழை. கிராமப்புறத்தில் மாதம் ஒன்றுக்கு ரூ. 53-க்கு குறைவாக வருமானம் பெறுபவர் ஏழை.** இந்த வருமான எல்லைக்குப் பெயர்தான் **வறுமை கோடு.** புரட்சித்தலைவர் அடிக்கடி பயன்படுத்தும் சொல்லுங்கூட.

நால்வரோ அல்லது ஐவரோ கொண்டது ஒரு சராசரிக் குடும்பம். குடும்பத்தில் ஒருவர்தான் சம்பாதிக்கிருர் என்ருல், மாத வருமானம் ரூ. 250க்கு மேலிருந்தால்தான் வறுமைக் கோட்டுக்கு மேலே] இல்லையெனின் அது ஏழைக்குடும்பம்.

இதன்படி ஆண்டு வருமானம் ரூ. 3000-க்கு குறைவாக உள்ள குடும்பங்களே ஏழைக்குடும்பங்கள் இவர்களின் எண்ணிக்கைதான் தமிழகத்தில் இரண்டரை கோடி.

ஜாதி அடிப்படையில் பார்த்தால் இவ்வேழைகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் முக்கால்கோடி, ஏனெனில் 100-க்கு 100 இடம்பெறுவர். மீதமுள்ளது ஒன்றே முக்கால் கோடி. இதில் முன்னேறிய வகுப்பு ஏழைகள் சில லட்சங்களே, ஏனெனில் முன்னேறிய வகுப்பாரின் மொத்த மக்கட் தொகையே குறைவு. சிறிது தாராளமாகவே 25 லட்சம் பேர் என்று வைத்துக்கொண்டாலும், **பின்தங்கிய ஜாதிகளைச்சேர்ந்தஆண்டுக்குரூ.3000க்கு குறைவாக வருமானமுள்ள ஏழைகள் ஒன்றரை கோடிப் பேர்.**

இவர்கள் பின்தங்கிய ஜாதியினர் மட்டுமல்ல, ஏழைகளுங்கூட; முடவர்கள் மட்டுமல்ல, குருடர்களுங்கூட.

வெறும் முடவர்களாகவோ, வெறும் குருடர்களாகவோ தனித்தனியேஇருந்தால் 'இரட்டைப் புலவர்'களைப் போலவாவது வாழ்க்கை நடத்தமுடியும். குருடர் சுமக்க, முடவர் வழிகாட்ட வாழ்க்கைப் பயணம் செய்யலாம். முடவரே குருடருமாயிருந்தால் வேறு யாராவதுதானே சுமக்கவேண்டும்? வேறு யார் வருவார்கள், புரட்சித்தலைவரைத்தவிர. வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ள பின்தங்கிய ஏழைகளுக்கே அரசின் சலுகைகள் செல்ல வேண்டும் என்பது புரட்சித்தலைவரின் ஆசை.

இருப்பினும் அவரே யோசித்தார். இதுவரை இருந்த சலுகைகளை ஒரேயடியாக எடுத்து விட்டோம் என்பது வேண்டாம்; படிபடியாகப்போவதே மேல் என்று, ஆண்டு வருமானம் ரூபாய் 3000/-என்பதை (வறுமைக்கோடு) ரூபாய் 6000/-என வைத்துக்கொள்ளலாம் என்ருர்.

பிறகு வருமான வரம்பு நிர்ணயம் செய்வதற்கு ஒரு அடிப்படை வேண்டும். ஒன்று வறுமையை அடிப்படியாகக் கொள்ளலாம். ஆனல் பெரும்பாலோர் பாதிப்புக்கு ஒரே சமயத்தில் ஆளாவர். ஆகவே அது வேண்டாம். பின் தங்கியோர் நலக்குழு பரிந்துரையை ஏற்கலாம் என்ருர் புரட்சித் தலைவர். பின் தங்கியோர் நலக்குழு திரு. கருணாநிதி அவர்கள் முதலமைச்சராக இருந்தபோது அமைத்த குழு. திரு. சட்டநாதன் குழுவின் தலைவர். அக்குழுவின் பரிந்துரையே ஆண்டு வருமானம் ரூ. 9000 க்கு மேல் உள்ள பிற்பட்ட ஜாதியினருக்கு அரசு சலுகை தேவையில்லை என்பது தான். ஆகவே அதை ஏற்றுக் கொண்டு இடப்பட்ட அரசு உத்தரவே, புரட்சித் தலைவர் பிறப்பித்த பின்தங்கியோர் நல ஆணை.

இதற்கிடையில் ஒரு சுவைமிக்க சம்பவம். இன்றைய நிகழ்ச்சிகளுக்கு அன்றைய காலக் கண்ணுடி.

வருமான வரம்பு பற்றி முதல்வரும் அரசு அதிகாரிகளும் விவாதிக்கின்றனர். ஒரு அதிகாரி கூறினர். 'இந்த உத்தரவு தேவை தானு என்பதை யோசியுங்கள். பின்தங்கியோரில் ஏற்கனவே படித்தவர்கள், பட்டம் பெற்றவர்கள், பதவி வகிப்பவர்கள், செல்வநிலையில் உள்ளவர்கள், டாக்டர்கள், எஞ்சினீயர்கள், வக்கீல்கள், வணிகர்கள் ஆகியோரெல்லாம் பாதிக்கப்படுபவர். அவர்கள் தான் மிகுந்த சத்தம் போடும் பிரிவினர் (Vociferous section) மிகப் பெரிய எதிர்ப்பைக் கிளப்புவர். ஆனல் நீங்கள் எந்த பாமரமக்களுக்காக இக்காரியத்தை மேற்கொள்கிறீர்களோ அவர்கள் பெரும்பான்மையினர்; ஆனல் பேசத்தெரியாதவர்கள் (silent majority) ஆகவே எதிர்ப்பு தான் மிஞ்சும் மீண்டும் சிந்தியுங்கள் என்ருர்.

உடனே புரட்சித்தலைவர் அந்த அதிகாரியைப் பார்த்து சொன்னர். நீங்கள் எந்த பாமரமக்களைப் பார்த்து அதாவது உடலுழைப்பைமட்டுமே நம்பி வாழும் மக்களைப் பார்த்து, பேசத் தெரியாத பெரும்பான்மையினர் என்கிறீர்களோ, அவர்கள் சார்பில் பேசுவதற்குத் தானே என்னை அவர்கள் இங்கே அனுப்பியுள்ளார்கள்'' என்றுதான் அமர்ந்திருந்த முதலமைச்சர் நாற்காலியை சுட்டிக் காட்டி பதிலளித்தது. மறக்க முடியாதது மட்டுமல்ல; பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய வரலாற்று நிகழ்ச்சியுங் கூட.

இன்று நாம் காண்கிறோம். பேசத் தெரியாத பெரும் பான்மையினருக்காகப் பேசும் புரட்சித்தலைவர் ஒரு புறம். கூப்பாடு போடத் தெரிந்த பிரிவினருக்கு கூக்குரல் எழுப்பும் எதிர்க்கட்சித் தலைவர் மறுபுறம்.

(வளரும்)

## காவிரி-கொள்ளிடத்தில் வெள்ள அபாய எச்சரிக்கை

திருச்சி, ஆக. 13-காவிரி கொள்ளிட நதிகளில்வெள்ளப் பெருக்கு ஏற்படும் என்று அபாய எச்சரிக்கை விடப்பட்டுள்ளது.

பொதுப் பணித் துறை நதிப் பாசனப் பிரிவு இந்த வெள்ள அபாய எச்சரிக்கையை விட்டிருக்கிறது

காவிரி, கொள்ளிட நதிக்கரைகளில் தாழ்வான பகுதிகளில் வசிப்பவர்கள் பத்திரமான இடங்களுக்கு செல்லவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது.

மேட்டூர் அணையில் ஞாயிறு மாலை நீர் மட்டம் 118.25 அடியாக இருந்தது. நேற்று இரவு அது கூடுதலாகி இருக்கும் என்றும் அணை நிரம்பி விடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

காவிரி நீர்பிடிப்பு பகுதிகளில் பலத்த மழை பெய்துள்ளதால் அணைக்கு நீர் வரத்து அதிகமாகியிருக்கிறது.

அணை முழு அளவுக்கு நிரம்பிவிடக்கூடுமாதலால் காவிரியிலும்,கொள்ளிடத்திலும் அதிக அளவுக்கு தண்ணீர் விடப்படலாம். எனவே இந்த முதல் வெள்ள அபாய எச்சரிக்கைச் கொடுக்கப்பட்டுள்ளது என்றுபொதுப்பணித் துறை நதிகள் பிரிவு என்ஜினியர் கே. சிரோமணி ராவ் தெரிவித்தார்.

## சென்னை நகர கல்லூரிகட்கு விடுமுறை

சென்னை, ஆக. 13 - சென்னை நகரில் உள்ள அனைத்து கல்லூரிகளுக்கு 13, 14 இரு நாட்களுக்கும் விடுமுறை விடப்பட்டுள்ளது.

சென்னை நகரில் எஸ்.ஐ.ஈ, டி. கல்லூரியை திறக்குமாறுமாணவிகள் கிளர்ச்சி செய்து வருகிருர்கள்.

இந்தக் கிளர்ச்சியை ஆதரித்து நகரில் உள்ள மற்ற கல்லூரி மாணவர்களும் வேலைநிறுத்தம்செய்வதாக அறிவித்துள்ளனர்.

இதையொட்டி கல்லூரி மாணவர்களும், பெற்ருேர்களும் விடுத்த வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு சென்னை நகரிலும் தாம்பரம் வரையிலுள்ள பகுதியிலும் உள்ள அனைத்துக் கல்லூரிகளுக்கும் 13, 14 இரு நாட்களும் விடுமுறை விடுமாறு அரசு உத்தரவு இட்டுள்ளது.

எனவே 13, 14 தேதிகளிலும் ஆக, 15-ந் தேதி விடுதலை நாள் அன்றும் எல்லா கல்லூரிகளுக்கும் விடுமுறையாதலால் கல்லூரிகள் இயங்காது.

## அண்ணு பிறந்த நாள் கட்டுரைப் போட்டி

சென்னை, ஆக. 13 பேரறிஞர் அண்ணு பிறந்த நாளை முன்னிட்டு ஆண்டுதோறும் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கு கட்டுரைப்போட்டி நடைபெறுகிறது.

அண்ணுவின் 71-வது பிறந்த நாளையொட்டி பள்ளி கல்லூரிகளில் பயிலும் மாணவ மாணவிகள் எழுதும் கட்டுரைகளை 30 8-79ந்தேதிக்குள் ஆணையூர் இஸ்மாயில், மே/பா, ஆயிசா அம்மாள் கல்வி பயிற்சியகம், 17 அவ்வை நகர், திருவான்மியூர், சென்னை-41 என்ற முகவரிக்கு அனுப்பிவைக்க வேண்டும்.

பள்ளி மாணவர்கள் "பேரறிஞர் அண்ணுவும் இந்தி திணிப்பு எதிர்ப்பும்'' என்ற தலைப்பிலும், கல்லூரி மாணவர்கள் "மாநிலங்கட்கு அதிக அதிகாரம்-அண்ணு ஏற்றிய அணையா விளக்கு'' என்றதலைப்புகளிலும்பத்து பக்கங்கள் அளவில் எழுதி அனுப்பவேண்டும்.

## விமானம் டயர் வெடித்தது ராஜ்நாராயண் உயிர் தப்பினர்

போபால், ஆக. 13. போட்டி ஜனதாவின் தலைவரான ராஜ்நாராயண் விமான விபத்தில் சிக்கி உயிர் தப்பினர்.

இந்த சம்பவம் மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த சாத்ஞ என்ற இடத்தில் நடந்தது.

போட்டி ஜனதா கட்சியின் தலைவரானராஜ்நாராயண் உ.பி. அரசுக்குச் சொந்தமான விமானத்தில் பயணம் செய்தார்.

அந்த விமானத்தில் உத்தரப்பிரதேச சுகாதார அமைச்சர் மான்சிங்கும் சென்ருர்.

மத்தியபிரதேசத்தில் உள்ள ஒரு சாமியாரை சந்திப்பதற்காகஅரசுவிமானத்தில் ராஜ்நாராயண் பயணம் செய்தார். அந்த விமானம் சாத்ஞ என்ற விமான நிலையத்தில் இறங்கியது. அப்போது விமானத்தின் டயர்கள் வெடித்தன. விமானத்தின் முன் பகுதி தரையில் இடித்தது. இதனல் அந்த விமானம் பயங்கரசேதத்துக்கு ஆளாகியது.

ஆனல் இதில் பயணம் செய்த ராஜ்நாராயண், உ.பி.அமைச்சர் மான்சிங் ஆகியோரும் விமானிகளும் காயமடையவில்லை. பின்னர் ஒரு காரில் சென்று ராஜ்நாராயண் சாமியாரை சந்தித்தார். அதிகாரிகள் ஏற்பாடு செய்த காரில் ஆக்ரா சென்று அங்கிருந்து உ. பி. அரசின் மற்ருெரு விமானத்தில் ஏறி ராஜ்நாராயண் டெல்லி சென்ருர்.

# ஊழலின் மொத்த உருவம் ஊழலைப்பற்றி பேசுவதா?

[முதல்வர் பேச்சு முதல் பக்கத் தொடர்ச்சி]

றும் ஏற்றுக் கொண்டு இருக்கிறீர்கள், அப்படித்தானே.

(ஆம். ஆம், குரலோடு கைதட்டல்)

நாளைய தினமே இதற்கு சட்டவடிவம்கொடுக்க சட்ட ஆலோசகர்களைக் கலந்து கொண்டு தேவையான உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்.

(கைதட்டல்)

இப்போது ஒன்றுக இணைக்க வேண்டும் என்று சொல்லிவிட்டு பிறகு எங்களை ஏன் சேர்த்தீர்கள் என்று கேட்க மாட்டீர்களே?

(மாட்டோம் மாட்டோம் என்ற குரல்)

இனி உங்களை முத்தரையர் என்று அழைக்க சட்டப்படி என்ன செய்ய வேண்டுமோ அதை அரசு செய்யும் என்ற உத்தரவாதத்தைத் தருகிறேன்.

(பலத்த கைதட்டல்)

இரண்டாவது தீர்மானத்தில் ரூ. 9 ஆயிரம் உச்ச வரம்பை ஆதரித்து இருக்கிறீர்கள். இந்த அறிவிப்பினால் கல்வி-சமூக-பொருளாதார நிலைகளில் மிகப் பின்தங்கியுள்ள முத்தரையர் மக்களுக்குபெரும் பயன் ஏற்படும் என்று ஒரு மனதாக வரவேற்று தீர்மானம் நிறைவேற்றி இருக்கிறீர்கள்.

ஆனால்இதுபற்றி இங்கே பேசியபோது சிறு சலசலப்பு இருந்ததாக செல்லையா தெரிவித்தார். இதைச் சொல்லிக்கூட சிலர் விளம்பரம் தேடிக் கொள்ள முயல்வார்கள். அதற்காகவேஇதைக்குறிப்பிடுகிறேன்.

## மக்கள் வரவேற்பு

பிற்பட்டோர் அரசு சலுகைகளைப் பெற வருமான வரம்பை ரூ. 9 ஆயிரத்தில் இருந்து 12 ஆயிரம் 15 ஆயிரம் என்று உயர்த்தவேண்டும் என்று சிலர் கேட்கிறார்கள்.

(உயர்த்த வேண்டாம். உயர்த்தவேண்டாம்என்று பலத்த குரல்).

இது குறித்து சில புள்ளி விவரங்களையும் உங்களிடம் தெரிவிக்க புள்ளி விவரங்களைக் கொண்டு வந்திருக்கிறேன்.

ரூ. 9 ஆயிரம் எல்லைக்கோடு கொண்டு வந்த காரணம் ரிக்ஷா இழுக்கும் தொழிலாளி, கல் உடைக்கும் தொழிலாளி, நெசவாளி, கூலிவேலை செய்பவர்கள் மூட்டை தூக்குபவர்கள் இப்படிப் பல தொழிலாளிக் குடும்பங்களில் இருந்து மருத்துவநிபுணர் பொறி இயல் நிபுணர் வழக்கறிஞர் வரமுடியும் என்பதே.

## இடது கம்யூனிஸ்டுக்கு பாராட்டு

இந்த வரம்பை ரூ. 9 ஆயிரத்தில் இருந்து ரூ. 12 ஆயிரமாக உயர்த்தவேண்டும்என்றுமார்க்சிஸ்ட்கட்சி தீர்மானம் நிறைவேற்றி இருந்தாலும் இந்தக் கொள்கையை வரவேற்று இருக்கிறது. இதற்காக அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டு இருக்கிறேன்.

எங்களுடன் எவ்வளவு விரோத உணர்வு இருந்தாலும் கொள்கையை விட்டுக்கொடுக்காமல் வரவேற்று இருக்கிறார்கள். இதற்காக தமிழக அரசின் சார்பில் நன்றி கூறக் கடமைப்பட்டு இருக்கிறேன்.

நல்லதை யார் செய்தாலும் ஏற்க வேண்டும். எவ்வளவு உயர்ந்தவர்கள் தவறு செய்தாலும் அந்த தவறை உணர்ந்து திருந்த வேண்டும். அப்படித் திருந்திக்கொள்ள முடியாவிட்டால் இடத்தைக்காலி செய்து மற்றவர்களிடம் தர வேண்டும். இது அறிஞர் அண்ணா எங்களுக்குக் கற்றுத் தந்த கொள்கை.

ரூ. 9 ஆயிரத்திற்கு குறைவாக வருமானம் பெறுபவர்களின் குழந்தைகள் படிக்க வாய்ப்பு கிடைக்க வேண்டும் என்பதுதான் எங்கள் ஆசை.

தாழ்த்தப்பட்டவர்களுக்கு என்று 18 சதவிகிதம் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. அதுபோல் பிற்படுத்தப்பட்டவர்களுக்கு 31 சதவிகிதம் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. யாரும் இதில் கைவைக்க முடியாது. சட்டம் இருக்கிறது, சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு இருக்கிறது.

பிற்பட்டவர்பட்டியலில் 220-க்கும் மேலான பிரிவுகள் இருக்கின்றன. இவைகள் ஒரேசமூகமாகஇல்லை.

கருணாநிதி சொல்கிறார்- பிற்பட்டவர்க்காக நான் 25 சதவிகிதத்தை 31 சதவிகிதமாகஉயர்த்தினேன்.

கவுண்டர் என்ற உயர் ஜாதியை பிற்பட்டவர் பட்டியலில் சேர்த்து 31 சதவிகிதம்ஆக்கினார். அந்த 6 சதவிகிதத்தை அவர்களுக்கு ஒதுக்குவதுபோல அவர்களைச் சேர்த்து 31 சதவிகிதம் ஆக்கினார்.

## புள்ளி விவரம் பேசும்

இதை நான் சொன்னதும் ஜாதியைப் பிரிக்கிறார் என்பார். என்னிடம் புள்ளி விவரங்கள் இருக்கின்றன. புள்ளி விவரத்தில் மாட்டிக்கொள்ள வேண்டாம் என்று கடந்த காலத்தை நினைவுபடுத்துகிறேன்.

முன்பு நான் எதிர்க்கட்சியில் இருந்தேன், மக்கள் தந்த பட்டியலைக் கொண்டு பட்டியல் கொடுத்தேன். இப்போது அப்படி அல்ல. முதல்வராக இருப்பதால் புள்ளி விவரங்களைப் பெறக்கூடிய நிலையில் இருக்கிறேன்.

ஆனால் முந்தைய ஆட்சியில் இருந்ததுபோல்இதில் ரகசியம் எதுவும் இல்லை. எங்களுக்கு அச்சமும் இல்லை.

31 சதவிகிதம் இந்த ரூ. 9 ஆயிரம் உச்சவரம்பால் பாதிக்கும் என்றார்கள். இப்போது பொறியியல் கல்லூரி மாணவர் தேர்வில் தரப்பட்டதா இல்லையா? கருணாநிதி அவர்களே சிந்தியுங்கள்.

51 சதவிகிதத்தில் 15 சதவிகிதத்தை தனியாக ஒதுக்கி உச்சவரம்பை வையுங்கள் என்கிறார்.

பிற்பட்டவர்களில் பிற்பட்டவர்கள் உயரவேண்டாமா?

நாங்கள் பதவிக்கு வருமுன்பே இந்தக் கருத்துக்களை சொல்லியிருக்கிறோம்.

ஒரு கிராமத்தில் 80, 85 வயது முதியவர் இருக்கிறார். அவரது மகன் பட்டினத்தில் வேலையாக இருந்து அவருடைய 4 வயது பையன் அந்த வீட்டில் இருக்கும் தொலைபேசியை சரியாகப் பயன்படுத்த தெரிந்தவனாக இருப்பான்.

ஆனால் அதை அந்தக் கிராமத்துப் பெரியவர் தெரிந்துஇருக்க முடியாது.

## ஏழுவயதில் டெசிமல் கணக்கு

நான் 7 வயதில் தமிழ் படித்து நாடக கம்பெனியில் சேருமுன்பு5-6வயதில் டெசிமல்கணக்கைப் போடுவேன். கூட்டல் கழித்தல் தெரியாது. ஆனால் டெசிமல் தெரியும்.

இதற்குக் காரணம் எனது தமையனாருக்கு எனது தந்தை சொல்லிக் கொடுப்பதைக் கேட்டுக் கேட்டு என்னால் போட முடிந்தது.

இதை ஏழை கிராம மக்களின் குழந்தைகள் கற்க முடியுமா?

சினிமாவில் நடிப்பவரது வீட்டுக் குழந்தைக்கு லாங் ஷாட்- குளோசப் காமிரா போன்ற சினிமா விவரம் தெரிய முடியும்.

அது போல வசதி படைத்த லட்சாதிபதிகள் ஆயிரம், 2 ஆயிரம் சம்பளம்பெறுபவர்கள்டாக்டர்களாக வக்கீல்களாக தேர்வு பெறுவது எளிது.

ஆனால் கிராமத்து ஏழை விவசாயியின் மகனுக்கு விவசாயத்தைத் தவிர வேறு பதில் தர முடியுமா?

## பரம்பரைத் தொழில் தேவையா?

காலம் காலமாக வண்டி இழுப்பவர் மகன் வண்டி தான் இழுக்க வேண்டுமா? பரம்பரையாக அந்த அந்த தொழிலைச் செய்ய வேண்டுமா?

மூதறிஞர் ராஜாஜி கொண்டு வந்த குலக் கல்வித் திட்டத்தை பேரறிஞர் அண்ணா எதிர்த்துப் போராடவில்லையா?

## கருணாநிதிக்கு பதில்

7 ஆண்டு காலம் முதல்வராக இருந்தவர் கேட்கிறார். ரிக்ஷாகாரரர் மகன் டாக்டராகலாம். ஆனால் டாக்டரின் மகன் ரிக்ஷாக்காரனாக ஆக வேண்டுமா என்று கேட்கிறார்.

டாக்டரின் மகன் டாக்டர் வக்கீல் மகன் வக்கீல் என்றால் மற்றவர்கள் வர வாய்ப்பு ஏது?

இதுதான் நியதிஎன்றால் ராமச்சந்திரன்மகன் முதல்வராக ஆகவேண்டும்.இது நியாயமா?

பந்தல் போடுபவன் மகனும் மந்திரியாக வரக்கூடிய நிலை ஏற்பட வேண்டாமா? கூலி வேலை செய்பவர் மகன் டாக்டராக வரும்போது டாக்டர் மகன் கூலி வேலைக்கு வரும் நிலை ஏற்படும். ஆகவே போராட்டம் என்கிறார் கருணாநிதி.

## ஊழலைப் பற்றி கருணாநிதி பேசுவதா?

இந்த வருமான வரம்பால் ஊழல் அதிகமாகும் என்கிறார்.

யார் இதைச் சொல்வது? கருணாநிதியா இதை சொல்வது? லஞ்சஊழலின் உருவாக இருப்பவரா இதனைச் சொல்வது? ஆண்டிற்கு ஆயிரம் கூட வருமானம் இல்லாத நிலையில் பலர் இருக்கும் போது இதில் ஊழல் எங்கிருந்து வரும்.

9 ஆயிரத்தை ஒருலட்சம் என்று போட்டால் வரக்கூடும்.

அவர் ஆட்சியில் மருத்துவக்கல்லூரி இடத்திற்கு ரூ 50 ஆயிரம்.எம்.எல்.ஏ. மூலம் முயற்சித்தால் பெறலாம் என்றநிலை இருந்தது.

பணம் இல்லாத ஏழை பணத்திற்கு எங்கே போவார்.

தன் புகழை வெளிப்படுத்த சில உண்மைகளை கருணாநிதி சொல்லி இருக்கிறார். பிற்பட்டவர்களுக்கு அதிக மார்க் போடச் சொன்னேன் என்கிறார்.

அப்படி என்றால் எதற்கு கமிட்டி? இவரே போட்டு விடலாமே.

இவரது ஆட்சியில் பிற்பட்டவர்களுக்கு 53 சதவிகிதம்தான் கிடைத்தது. ஆனால் இப்போது 59 சதவிகிதம் கிடைத்து இருக்கிறது.

(கைதட்டல்)

இதை எதிர்த்துத்தான் கருணாநிதி போராட்டம் நடத்தப்போவதாகச் சொல்கிறார். அந்தப் போராட்டத்தை சந்திக்க நாங்கள் தயார்.

(கைதட்டல்)

இப்போது பொறியியல் கல்லூரியில் இடம் பெற்றவர்களில் ஆண்டு வருமானம் ரூ. ஆயிரத்திலிருந்து 2 ஆயிரம் வரை உள்ளவர்களின் பிள்ளைகளுக்கு 31 சதவிகிதஇடங்கள் கிடைத்துள்ளன.

## ஏழையின் மகன் எஞ்சினியர்

விவசாயியின் மகன், ஒரு பிட்டரின் மகன், காவலாளியின் மகன், நெசவாளியின் மகன், சிறு தொழில் நடத்துபவரின் மகன்- கூலி வேலை செய்பவரின் மகன் - ஓய்வு பெற்ற ஆசிரியரின் மகன், ஆசாரியின் மகன், வீட்டு வேலை செய்பவரின் மகன் - இப்படிப்பட்டவர்களின் பிள்ளைகள் இடம் பெற்று இருக்கிறார்கள்.

நாங்கள் ஆட்சிக்கு வருமுன்பு சொன்ன கருத்துக்களை நினைவுபடுத்துகிறேன். பின் தங்கிய கிராம மக்களுக்கு மறுவாழ்வு அளிப்போம் என்றோம். அந்த கிராம மக்களின் பிள்ளைகள் டாக்டர்களாக - எஞ்சினியர்களாக வரவேண்டும்.

## மூன்றில் இரண்டு பங்கு

பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு 31 சதவிகிதப்படி 363 இடங்கள் தான் கிடைக்கவேண்டும். 51 சதவிகித பொதுப்பட்டியலில் இருந்து 246இடங்கள் ஆகமொத்தம் 609 இடங்கள் கிடைத்துள்ளன.

ஏறத்தாழ மூன்றில் இரண்டு பங்கு இடங்களைப் பிற்பட்டவர்கள் பெற்று இருக்கிறார்கள்.

ஆனால் கருணாநிதி போராட்டம் போராட்டம் என்கிறார்.

## போராட்ட ரகசியம்

எதிர்க்கட்சிகள்போராட்டம் நடத்துவது தங்கள் கட்சியும் இருக்கிறது என்பதைக் காட்டவே என்று ஒரு பெரியவர் சொல்லி இருக்கிறார்.

அந்தப் பெரியவர் சொல்லி இருப்பதைப்பின்பற்றி கருணாநிதியும்எதற்கு எடுத்தாலும் போராட்டம் என்கிறார்.

## ஓய்வு ஊதியம் அதிகரிப்பு

ஆதரவற்ற வயோதிகர்கட்கு உதவித்தொகை தருகிறோம். காமராஜர் காலத்தில் இந்த திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது.

இந்த அரசு வந்த பிறகு தான் அந்த உதவித் தொகை ரூ. 20ல் இருந்து 25ஆக உயர்த்தப்பட்டது.

இந்தத்திட்டம் முழுமையாக அமல் நடத்தப்படவில்லை. ஒரு பகுதியில் ஆயிரம் பேருக்கு இந்த உதவி தரப்பட்டால் அதில் யாராவது இறந்தால்தான் புதியவர்களுக்கு கிடைக்கும் நிலை இருந்தது.

இந்தக் கணக்கை மாற்றச்சொல்லி இருக்கிறேன். இவர்களுக்கு 2 வேட்டி 2 சேலை இலவசமாகத் தர அரசு உத்தரவிட்டுள்ளது. நேற்று இந்த திட்டம் துவக்கப்பட்டது. இனி ஆங்காங்கு இவைகள் தரப்படும்.

(கைதட்டல்)

இவர்களுக்குத் தரப்படும் உதவித் தொகை சரியாக- முழுமையும் கிடைக்க குறிப்பிட்ட நாளில் மக்கள் முன்பு குறிப்பிட்ட அதிகாரிகள் வழங்க வேண்டும் என்றும் கூறி இருக்கிறோம்.

## முதியோருக்கு அடையாள அட்டை

அடுத்த ஆண்டுக்குள் அவர்களைப் படம் எடுத்து அடையாள அட்டை தர ஏற்பாடுசெய்யப்படும். இதன் மூலம் ஆள் மாறாட்டம் போன்ற தவறுகள் நடக்காமல் இருக்கும்.

நான் முதலில் குறிப்பிட்டது போல் ஒற்றுமை அவசியம். ஒற்றுமையாக இல்லாததால்தான் சிலர் உயரவும் நீங்கள் தாழ்வு நிலையிலும் இருக்கிறீர்கள்.

நீங்கள் அத்தனை பேரும் ஏணிகளாக இருக்கிறீர்கள்.

## ஏணியை உதைத்த கருணாநிதி

சிலருக்கு நான்கூட ஏணியாக இருந்திருக்கிறேன். ஏணியில் ஏறியவர் ஏணியில் ஏறி மற்றவர்களைப் பழி வாங்கினார்.

கருணாநிதி என்னை ஏணியாகப் பயன்படுத்திக் கொண்டார். இனி ஏணியாக இருக்க நான் தயாராக இல்லை.

மற்றவர்கட்கு எம்.எல்.ஏ. பதவி, எம்.பி. பதவி, அமைச்சர் பதவி வாங்கித் தர நான் தயாராக இல்லை என்று வெளியேவந்தேன்.

## மக்களுக்கு நான் ஏணி

ஆனால் ஏழை மக்கள் ஏற்றம் பெற நான் என்றும் ஏணியாக இருப்பேன்.

(கைதட்டல்)

மகிழ்ச்சியோடுஇந்த சுமையைச் செய்வேன்.

## யார் யாரைத் தழுவுகிறார்கள்

1965-ம் ஆண்டில் நடந்தது போல போராட்டம் நடக்கும் என்கிறார் கருணாநிதி. நாடுதழுவிய போராட்டம் என்கிறார். நாடு இவரைத் தழுவியதா? இவர் நாட்டைத்தழுவுகிறாரா தெரியவில்லை. ஆனால் பிணங்கள் விழும் என்கிறார்.

மக்களைத் தூண்டி விடுவது, உணர்ச்சி வசப்படுத்துவது எளிது.

கூட்டம் - ஊர்வலம் வரும்போது பின்னால் இருப்பவர் கல்லை எறிந்தால் இதனால் ஆத்திரம் வரும். தங்களைக் காத்துக் கொள்ள பதிலடி தரும் நிலை உருவாகும்.

இப்படிப்பட்ட நிலைகளை உருவாக்குவது எளிது.ஆத்திரம் அடைந்தவர்களை அமைதிப்படுத்துவது எளிது அல்ல.

போராட்டம் வரும், பிணங்கள் விழும், சாவு வரும்என்கிறார் கருணாநிதி.

## 65-ஆம் ஆண்டு சோக நிகழ்ச்சி தேவையா?

65-ம் ஆண்டில் செத்தவர் யார்? எந்தத்தாயோ தந்தையோ பெற்ற ராஜேந்திரன்பிணமானார்.

அவர் இன்று உயிரோடு இருந்தால் எஸ்.டி.எஸ்-சுக்குப் பதிலாக எனக்கு பதிலாகக்கூட வந்திருக்க முடியும்.

14 ஆண்டுகட்கு முன்பு ஏற்பட்ட துன்பம்-சோகம் இப்போது தேவையா?

ஆனால் அப்போது அந்த போராட்டத்தை நான் தூண்டவில்லை என்று கோர்ட்டில் கூறினார், அந்தப் போராட்டத்திற்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை என்றார்.

நான் தனிமைச் சிறையில் பாளைச்சிறையில் இருந்தேன் என்றார்.

நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகு அவர் தந்த வக்காலத்தைக் கவனித்தோம் மாறன் மூலம்அந்த வக்காலத்து தரப்பட்டு இருக்கிறது.

சிறையில் இருக்க பயந்து கொண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை, தி. மு. கழகத்தின் கட்டளை அல்ல என்று எழுதிக் கொடுத்தார்.

ஆனால் அந்தப்போராட்டத்தில் ராஜேந்திரனை இழந்த அந்த தாய்க்கு அந்த மகனைத் தர கருணாநிதியால் முடியுமா!

கொதிக்கும் அந்ததாயின் வயிற்றை குளிர வைக்க முடிந்ததா?

அந்த தாய் தன் மகனை இழந்தது இழந்தது தான் கண்ணீர் விட்டதுவிட்டது தான் ஆனால் தன்னை நீதிமன்றமே விடுதலை செய்ய உத்திரவுபிறப்பிக்க வேண்டும்.இல்லாவிட்டால் வழியில் கைது செய்து விடுவார்கள் என்றார் கருணாநிதி.

எவ்வளவு பயப்பட்டார் என்பது மாறன் மூலம் வாக்குமூலத்தில் சொல்லியிருப்பதிலிருந்து தெரியும்.

## கருணாநிதி திட்டம் என்ன ?

ஆனால் இப்போது 1965 போல நடக்கும் என்கிறார். எத்தனை மாணவர்களை சாகடிக்க திட்டமிட்டு இருக்கிறார்? என்னதிட்டம் வைத்து இருக்கிறார்?

தமிழக மக்களை இதில் ஈடுபடுத்த கருணாநிதி நினைக்கிறார். மக்களுக்கு சிந்திக்க அறிவு இருக்கிறது.

## தமிழர்க்கு தமிழர் பலியா?

மக்களைக் கூப்பிட்டுக் கொள்ளி வைக்கப் பார்க்கிறார். யார் தலையில் வைப்பது? தமிழரைக் கொண்டு தமிழரைப் பலி கொடுப்பதா?

தங்க ஊசி என்றாலும் கண்ணில் குத்திக்கொள்ள மாட்டார்கள். கருணாநிதி நடத்தும் போராட்டத்திற்கு மக்கள் ஒத்துழைக்க மாட்டார்கள் என்பதைப் புரிந்து இருப்பார்.

வறுமைக் கோட்டின் கீழே-மாதம் 50 ரூபாய் கூட வருமானம் இல்லாதவர்கள் 45 முதல் 50 சதவிகிதம் வரை இருக்கிறார்கள்.

ரூ. 15 ஆயிரம் 20 ஆயிரம் என்று வரம்பு நிர்ணயித்தால் இந்த ஏழைகள் எப்போது முன்னேற முடியும்?

இப்படிப்பட்டவர்கள் வேலை பெற வேண்டும். இவர்களுக்கு வீடு கட்டித் தரவேண்டும். இதற்காக தொழிற்சாலை உருவாக வேண்டும்.

ஆற்றில் கொட்டினாலும் அளந்து போடு என்பார்கள். ஆகவே சிந்தித்து செயல்பட வேண்டி இருக்கிறது.

## ஏழைகட்கு லட்சம் வீடுகள்

அடுத்த 2 ஆண்டுகளில் லட்சக்கணக்கில் வீடு கட்டித் தர திட்டமிட்டு இருக்கிறோம்.

இதற்குத் தேவையான செங்கல், சுண்ணாம்பு முதலியவைகளை தயாரிக்க தொழில்களை மக்கள் துவக்கினால் அரசு இதற்கு உதவும்.

சமுதாயத்தில் வீழ்ந்து விட்ட மக்கள் பின்தங்கிய மக்கள் வசதி பெற வேண்டும். இதற்காக நாங்கள் பாடுபடுவோம். இது அண்ணாவின் கொள்கை.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

---

### வரலாறுகாணாவிபத்து:குஜராத்தில் அணைஉடைப்பு

# 5000பேர்சாவு

## பத்தாயிரம் பேர் கதி தெரியவில்லை

**ராஜ்கோட், ஆக 13- குஜராத் மாநிலம் ராஜ்கோட் அருகே மச்சூ என்ற அணை உடைத்துக் கொண்டதன் விளைவாக ஆயிரம் பேர் இறந்து போய் விட்டனர். 5000 பேர் இறந்து போயிருக்கக் கூடும் என்று அதிகாரபூர்வமற்ற தகவல்கள் கூறுகின்றன. 10 ஆயிரம் பேர் கதி என்னவாயிற்று என்று இன்னும் தெரியவில்லை.**

அணை உடைப்பெடுத்ததால் சுற்றுப்புற நகரங்களும், கிராமங்களும் வெள்ளத்தில் மூழ்கியுள்ளன. எங்கும் ஒரே பிணககுவியலாக இருக்கிறது குஜராத் மாநிலமே சோகவடிவமாகக் காட்சியளிக்கிறது.

குஜராத் மாநிலத்தில் வரலாறு காணா மாபெரும் விபத்து நடந்துள்ளது.

குஜராத்தில் ராஜ்கோட் அருகே மச்சூ அணை உடைத்துக் கொண்டதன் விளைவாக ஆயிரம் பேர் மாண்டிருக்கக் கூடும் என்று அஞ்சப்படுகிறது.

### வெள்ளம் வெள்ளம்

அணைஉடைப்பு எடுத்ததால் ஏற்பட்ட வெள்ளம் மோர்வி நகரியத்தையும் (டவுன் ஷிப்) சுற்றுப்புறப் பகுதிகளையும் சூழ்ந்து கொண்டது.

மாண்டவர்களின் எண்ணிக்கை 5-ஆயிரத்திற்கும் அதிகம் என்று அதிகாரப்பூர்வமற்ற தகவல்கள்கூறுகின்றன.

### 10 ஆயிரம் பேர் கதி என்ன?

வெள்ளத்தால் சூழப்பட்ட மாலியா என்ற நகரைச் சேர்ந்த 10 ஆயிரம் பேர் கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. இவர்கள் அனைவருமே வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டிருக்கக்கூடும் என்று அதிகாரபூர்வமற்ற தகவல்கள் கூறுகின்றன. இந்தத் தகவலை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள செய்த முயற்சிகள் பலிக்கவில்லை.

### பலத்த மழை

மச்சூ அணைக்கட்டுப் பகுதிகளில் கடந்த சில வாரங்களாகபலத்தமழை பெய்து வருகிறது.

பலத்த மழையின் விளைவாகவே அணை உடைத்துக் கொண்டது என்று குஜராத் மாநில விவசாய அமைச்சர் கேஷூபாய் படேல் கூறியுள்ளார்.

மோர்வியிலிருந்து ராஜ்கோட் திரும்பிய படேல் மிகவும் சோகமாகக் காணப்பட்டார்.

''இது மிகவும் பரிதாபகரமான சம்பவம். இதன் விளைவுகளை உடனடியாக மதிப்பிடுவதற்கில்லை'' என்றும் படேல் தெரிவித்தார்.

சனிக்கிழமையன்றுஅணை உடைப்பெடுத்தது. இதனால் ரயில் போக்குவரத்து சாலைப் போக்குவரத்து உட்பட அத்தனையும் பாதிக்கப்பட்டது.

நிலைமையை நேரில் கண்டறியச் சென்ற பத்திரிகையாளர்களால் மோர்வி நகருக்கு ஞாயிறு பிற்பகல்தான் போய்ச் சேர முடிந்தது.

### பிணக் குவியல்

எங்கு பார்த்தாலும், சடலங்கள் இறைந்துகிடப்பதாகப் பத்திரிகையாளர்கள் தெரிவித்துள்ளனர்.

சனிக்கிழமை பிற்பகல் 3 மணி அளவில் மோர்வி நகரில் பெருமளவு வெள்ளம் புகத்தொடங்கியதாக உயிர் தப்பியவர்கள் நிருபர்களிடம் கூறினார்கள்.

60 ஆயிரம் ஜனத்தொகை கொண்ட மோர்வி நகரின் பல பகுதிகள் இன்னமும் வெள்ளத்தில் மூழ்கியிருக்கிறது. பல பகுதிகளுக்கு இன்னமும் போக முடியவில்லை.

மோர்வி நகரில் மட்டும் 5 ஆயிரம் பேருக்கு மேல் மாண்டிருக்கக் கூடும்என்று என தாம் அஞ்சுவதாக மோர்வி நகர சபையின் முன்னாள் தலைவர் ஜெஸ்வானி கூறியுள்ளார்.

### பேய்க்காற்று

வெள்ளத்தால் ஏற்பட்டுள்ள நாசத்தைக்கண்டறியும்படி விமானப்படையினர் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளனர். ஆனால் பருவ நிலை சரியில்லாத காரணத்தால்அப்பகுதிக்கு ஹெலிகாப்டர்கள் செல்ல முடியவில்லை. மழை தொடர்ந்து பெய்து கொண்டு இருப்பதுடன் பேய்க்காற்றும் வீசிக் கொண்டு இருக்கிறது. இதனால் நிவாரண நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டுள்ளன.

### துண்டிப்பு

டெலிபோன் எக்சேஞ்சு சர்வநாசத்திற்கு உள்ளாகி இருக்கிறது. மோர்வி மக்கள் வெளியுலகத் தொடர்பில்லாமல் இருக்கிறார்கள்.

நகரில் உணவு கிடையாது. இந்த பயங்கர வெள்ளத்திலும் குடிநீர் இல்லை. வீடுகள், கடைகள் எல்லாவற்றிலும்வெள்ளம் புகுந்து விட்டது.

பல கட்டிடங்களில் மாடிகளில் கூட மணல் மேவியுள்ளது.

தனது மூன்று சகோதரர்களை வெள்ளம் அடித்துச் சென்று விட்டதாகச் சொல்லி ஒரு சிறுமி அழுதாள். அது கல்மனதையும் கரையவைப்பதாக இருந்தது.

வெள்ளத்திற்குப் பயந்து வீட்டுக் கூரையில் ஒண்டிக் கொண்டிருக்கும் போது இந்தப் பரிதாபகரமான சம்பவம் நடந்து

4ம் பக்கம் பார்க்க

### கதி என்ன?

ராஜ்கோட்டிலிருந்து 60 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மாலியா நகர் முற்றிலுமாக வெள்ளத்தால் சூழப்பட்டு இருக்கிறது.

அந்த நகரைச் சேர்ந்த 10 ஆயிரம் பேர் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை என்று ராஜ்கோட்டிற்கு அதிகாரபூர்வமான தகவல் கிடைத்துள்ளது.

மச்சூ அணை 1972-ம் ஆண்டு கட்டப்பட்டது.

### வீடுகள் நாசம்

மோர்வி நகரில் பெரும்பாலான வீடுகள் இடிந்து விழுந்து விட்டதாக ராணுவத்தினரும், ஊர்க்காவல் படையினரும் அடங்கிய நிவாரண கோஷ்டியினர் தெரிவித்தனர்.

விபத்து நடந்த இடத்திற்கு விவசாய மந்திரி கேஷூபாய் படேல், டாக்டர்கள், தொண்டர்களுடன் விரைந்து நிவாரணப் பணிகளில் ஈடுபட்டார்.

---

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வைசண்முகம்சாலை.சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004. ஆசிரியர்:எம். ஜி. சக்ரபாணி

அண்ணா





# குன்றத்துவிளக்கு

## கா. காளிமுத்து

# விறகுகளல்ல; வேல்கள்!

ஒரு கட்சி-தன் கொள்கை- கோட்பாடுகளைச் சொல்லி-மக்களிடம் வாக்குக் கேட்கிறது. ஆளுங்கட்சியாக அது ஆகும் போது தன் கொள்கை அடிப்படையிலான செயல் திட்டங்களை நிறைவேற்ற முற்படுகிறது வாக்களித்த மக்களுக்கு- அளித்த வாக்கை நிறைவேற்றுவது தான் ஜனநாயக நீதி! பிற்பட்ட ஏழைகளின் வாழ்வில்-ஒளியேற்றி வைக்க வருவாய் வரம்பு ஆணையை அரசு வெளியிட்டது. அதை வெளியிடுவதற்கு முன் எங்களை ஏன் கலந்தாலோசிக்கவில்லை எனக்கலைஞர் காரமாகக் கேட்கிறார்.

நடைபெறுவது- அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அரசு.

அனைத்துக் கட்சி அரசல்ல. சர்வகட்சியினரையும் கேட்டுத்தான் சர்க்கார் இயங்க வேண்டுமென்றால், குழப்பம்தான் எஞ்சும். அரசு வெளியிட்ட ஆணை-சரியா தவறா என்பதற்கு பொது வாக்கெடுப்பு நடத்தவும் கூடத்தயார் எனப் புரட்சித் தலைவர் தெரிவித்திருக்கிறார்.

மடியிலே கனமிருந்தால்தான் வழியிலே பயம். சொந்த நலத்துக்காக-அல்லது தன்னைச்சார்ந்தவர்களின் சுக வாழ்வுக்காக அரசாணை பிறப்பிக்கும் போதுதான் அவருக்கென்ன பதில் சொல்வது? இவருக்கென்னவிளக்கமளிப்பது என்று சித்தம் குழம்பும்!

சந்தேகமும்-சஞ்சலமும் ஏற்படும்.

'சரிக்கட்டும்' மார்க்கம் என்ன என்று ஆராய்ச்சி தோன்றும்!

ஆனால்-நினையளவும் தன்னலமின்றி-தாய்த் திருநாட்டின் ஏழையர் நலம் காக்கும் திட்டத்தைப் புரட்சித்தலைவர் தீட்டியிருக்கிறார்.

'எளியோர் பலர்' பாராட்டுகிறார்கள்!

'வலியோர் சிலர்' எதிர்க்கிறார்கள்!

எழுச்சி நெருப்பின் முன் எதிர்ப்பு-எரி சருகு!

இந்த 'வருவாய் வரம்பு' ஆணைகூட-தன் மூப்பாக-எடுத்தேன்; கவிழ்த்தேன்-என்ற போக்கில் இடப்பட்டதல்ல.

பிற்பட்டோர் நலத்துக்கான ஆய்வுரையினைத் தர கலைஞர் காலத்தில் நியமிக்கப்பட்ட சட்டநாதன் குழுவின் பரிந்துரைகளில் ஒன்றைத்தான் அனைத்திந்திய அண்ணா தி மு க அரசு செயலாக்கியிருக்கிறது.

"நானே அமைத்த குழு-நானே நிறைவேற்றாதபோது நீங்கள் ஏன் நிறைவேற்ற வேண்டும்?" எனக்கலைஞர் வினா விடுக்கிறார்.

இந்த 'நானே நானே' என்ற சுயநலப் பாட்டு தான் கலைஞரது ஆட்சியின் மீதே அருவருப்பை ஏற்படுத்திற்று.

சட்டநாதன் கமிஷன் போன்றவை தந்த 'சிபாரிசு'களைப் பொதுநலத்தோடு செயல்படுத்தாமல்- சொந்தச 'சிபாரிசு'களையோ செயல்படுத்தியதின் விளைவு தான்- சர்க்காரியா கமிஷன்.

'சாலமான்' மன்னனைப்போல- ஆட்சியாளருக்கு இவரே 'உதாரண புருஷராக' இருந்தது போல்- 'நானே' செயல்படுத்தவில்லை எனப் பேசுவது சரியோ முறையோ-ஜனநாயகப் பண்போ அன்று!

இந்தப் புதிய உத்தரவு-ஊழலை அதிகமாக்கும் என்று-ஊழலுக்காகவே உத்தரவுபோட்டவர்கள் பேசுவது தான் உலக மகா வேடிக்கை!

புரட்சித்தலைவர் தெரிவித்தது போல் 9000 ரூபாய்-வருவாய்க்குக் கீழே இருப்பவர்கள் எவரும்- பல்லாயிரக் கணக்கான ரூபாய் பணத்தைப் படிக்கட்டுகளாக்கித் தங்கள் பிள்ளைகளை மருத்துவக் கல்லூரிக்கு அனுப்பி வைக்க முடியாது.

எனவேதான்-இந்தப் புதிய உத்தரவு இலஞ்சத்தின் கொடுக்கையே நறுக்குகிறது என்கிறோம்.

கலைஞரும்- வீரமணியும் யாருக்காக வாதாடுகிறார்கள்?

மார்க்சிஸ்ட் தலைவர் ஏ பாலசுப்பிரமணியம் குறிப்பிட்டது போல்- வாண்டையார்- மன்றாடியார் போன்ற 'வசதி' யற்ற, பிற்பட்டோர்- இந்த ஆணையின் மூலம்- அல்லல்படுவார்களே என்பதற்காக- அவர்களுக்காக அழுகிறார்கள்!

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும்- இவர்களிடம் கடன் வாங்கிய 'இரவல்' குரலில் பேசுகிறது- எக்சார்சிஸ்ட் பெண்- பேயின் குரலில் பேசியது போல.

தான் இழுத்த இழுப்பிற்குத் தமிழகம் வரவில்லை என்பதை அறிந்ததும் கலைஞருக்கு தத்துவ ஞானம் பிறக்கிறது.

'தமிழர்கள்- தாமதமாகவே உணர்ச்சிவசப்படுவார்கள்'- என்கிறார்.

ஏன்? ஏழாண்டுக்காலம் இவரது ஆட்சியைச் சகித்துக் கொண்டிருந்தார்களே- அதை வைத்துக் கூறுகிறாரா?

அரசின்-புதிய ஆணையின் - அடிப்படையில்-பொறியியற் கல்லூரிக்கு மாணவர்கள் தேர்வு செய்யப்பட்டு விட்டனர்.

முந்திய ஆண்டுகளைவிடப் - பிற்பட்டோருக்கு அதிக விழுக்காடு கிடைத்திருக்கிறது என்ற புள்ளி விவரமும் தெரிவிக்கப்பட்டுவிட்டது.

இனி-எதற்காக - யாருக்காகப் போராடுவது? யாரை எதிர்த்துப் போராடுவது? எப்போது போராடுவது? என்று அவர்கள் அணியிலிருப்பவர்களே முணுமுணுக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

'தமிழர்கள் ஈர விறகுகள். காயப்போட்டு வைக்கிறேன்' என்று கூறுதன் மூலம் எதிர்க்கட்சித் தலைவர் தமிழர்களை 'விறகு'களாக்கிக் குளிர் காயச் சந்தர்ப்பத்தை எதிர்பார்ப்பது புரிகிறது.

தமிழர்கள்- ஈர விறகுகளல்லர்; எடுப்பார் கைப்பிள்ளைகளுமல்லர்; தாமதமாக 'உணர்ச்சி' பெறுகிற அளவுக்கு- அப்பாவிகளுமல்லர்.

எதற்கு எப்போது உணர்ச்சி வசப்படுவதென்பதை- அவர்களுக்கு எவரும் போதனை செய்ய வேண்டியதில்லை.

ஒரு கட்சியிலிருந்து ஒரு தலைவர் நீக்கப்பட்டதற்கு-எதிர்ப்புத் தெரிவிக்க எரிமலையையும்- அலைகடலையுமே இரண்டாம் தரமாக்குகிற அளவுக்கு நாடு உணர்சசி வசப்பட்டு ஆர்த்தெழுந்தது

ஆனால ஒரு ஆட்சியிலிருந்து கட்சி

நீக்கப்பட்டபோது நாடு 'அமைதி' யாக வரவேற்றது.

ஏன் என்பதை இப்போதாவது அவர்கள் எண்ணிப் பார்த்திட வேண்டாமா?

புரட்சித்தலைவரின்- பிற்பட்டோர் வருவாய் வரம்பு ஆணைக்குப் பிறகும் தமிழகம் உணர்ச்சி வசப்படாமல் இருக்கிறதெனக் கலைஞர் வருந்துகிறார். வருந்தத் தேவையில்லை.

தமிழகம் உணர்ச்சி வசப்படத்தான் செய்கிறது.

அதனால்தான் 'பின்தங்கிய ஏழையரின் வாழ்வில் புதுமலர்ச்சி உண்டாக்கிய ஏந்தலே' என்று நெஞ்சுருகக் கண் கலங்கக் கைகூப்பிப் புரட்சித்தலைவரை வணங்கி வாழ்த்துகிறார்கள்.

உணர்ச்சியோடுதான் தமிழினம் இருக்கிறது.

அவர்களை 'விறகு' களெனக் கருதி விளையாட வேண்டாம்.

உலகத் தமிழ் மாநாட்டில்

# தமிழ் இலக்கியங்கள் பற்றி ஆராய்ச்சி: அமைச்சர் ஆர். எம். வீ. அறிவிப்பு

சென்னை, ஆக. 13-ம துரையில் நடைபெறும் உலகத் தமிழ் மாநாட்டில் தொல்காப்பியம் முதல் பாரதி-பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் வரை இயற்றியுள்ள இலக்கியங்கள் ஆராயப்பட்டு பாராட்டப்படும் என்று அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

நீதிபதி இஸ்மாயில் எழுதிய செவிநுகர் கனிகள் என்ற நூலை வெளியிட்டு அமைச்சர் ஆர்.எம்.வீ. கம்பன் விழாவில் பேசினார்.

உலகத் தமிழ் மாநாட்டுக்கு அரசு அழைக்கவில்லை என்று கருணாநிதி சொல்வது பொய் என்றும் அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசியதாவது:

"கம்பனைப் போல்- வள்ளுவர் போல் இளங்கோவைப்போல்பூமிதனில்யாங்கணுமே பிறந்ததில்லை" என்று பாரதியார் பாடி இருக்கிறார்.

ஒரு சாதாரணமான என்னை அழைத்து இந்த புத்தகத்தை வெளியிடச் செய்து இருக்கிறார்கள்.

நாங்கள் எல்லாம் ஒரு இடத்தில் பயின்று வந்தவர்கள். பெரியாரிடம் அரிச்சுவடி பயின்று அண்ணாவின் பல்கலைக்கழகத்தில் பாடம்கற்று புரட்சித் தலைவரிடம் 25 ஆண்டு காலமாக மனிதன் எப்படி வாழவேண்டும் என்பதைக் கற்று வருகிறேன்.

## அண்ணா அரசு

'தொழுத கையுள்ளும் கொடுவாள்' என்ற கருத்தை இங்கேமாணவர் விளக்ககாந்தியடிகளின்வரலாற்றைத் தேடிச் சென்றார்.

அவ்வளவு தூரம் அவர் செல்ல வேண்டியதில்லை. புரட்சித்தலைவரையேகுறிப்பிட்டு இருக்க முடியும்.

தர்மத்தின் சின்னமாக புரட்சித்தலைவர் இருக்கிறார். இங்கே முதல்வர் பேசிய பிறகு கடைசியில் நான் பேசுகிறேன். இதே நிலை 2 - 3 ஆண்டுகட்கு முன்பு முதல்வராக இருந்தவர் காலத்தில் நடக்க முடியுமா?

பாரதி சொன்ன கம்பனை நாம் மக்களிடையே பரப்ப வேண்டும்.

வாசிக்க வேண்டிய நூலை பூசைக்கு வைத்து விட்டார்களே என்று தான் பெரியார் கூட சொல்லி இருக்கிறார். கம்பராமாயணத்தை அழிக்க நாங்கள் விரும்பவில்லை.

தமிழில் இலக்கியத்திற்குப் பஞ்சம் இல்லை. குறளுக்கு ஈடு இணை இல்லை. காரல்மார்க்ஸ் தத்துவத்துக்கு முன்பே அந்த தத்துவத்தை சொல்லி இருக்கிறார். அண்ணாவின் அரசு இது என்று புரட்சித்தலைவர் சொல்லி வருகிறார்.

இந்த சந்தர்ப்பத்தை தமிழ் அறிஞர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

## புரிந்து கொள்ளுங்கள்

தமிழில் நீதிமன்றங்களை நடத்த முடியாது என்று சொல்கிறார்கள். இங்கே நீதிபதி அவர்களே தலைமை தாங்குகிறார். தமிழ் அந்த அளவுக்கு இருக்கிறது.

உலகத்தமிழ் மாநாடு நடைபெற இருக்கிறது. அந்த மாநாட்டில் நாங்கள் கலந்துகொள்ள மாட்டோம். அதில் கலந்து கொண்டால் அதற்குப் புகழ் வந்துவிடும் என்று சிலர் கூறுகிறார்கள்.

அந்த மாநாட்டில் கலந்து கொள்ள அழைப்பு வரவில்லை என்றுகருணாநிதி சொல்கிறார். அரசின் சார்பில் அழைப்பு அனுப்பப்பட்டு இருக்கிறது. அப்படியிருந்தும் அழைப்பு வரவில்லை என்கிறார். இப்படிப்பட்டவர்களை அடையாளம் தெரிந்து கொள்ள வேண்டும்.

உலகத் தமிழ் மாநாட்டில் தொல்காப்பியம் முதல் பாரதியார்-பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் வரை இயற்றியுள்ள நூல்கள் ஆராயப்பட்டு பாராட்டப்படும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

## 5000 பேர் மரணம்

(3ம் பக்கத் தொடர்ச்சி)

இருக்கிறது.

இடிந்த வீடுகளில் பிணக்குவியலைக் கண்டதாகப் பத்திரிகையாளர்கள் கூறினர்.

### குடும்பம் குடும்பமாக...

சில பகுதிகளில் அனைத்து குடும்பங்களும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன.

### வெளியேற்றம்

அணைக்கட்டுப் பகுதியில் உள்ள நகரங்களிலிருந்தும், கிராமங்களிலிருந்தும் மக்கள் கூட்டம் கூட்டமாக வெளியேறிய வண்ணம் உள்ளனர்.

சாலைகளில் ஏற்பட்டுள்ள தடைகள் காரணமாக ராணுவம் உடனடியாக உதவிக்கு விரைய முடியவில்லை.

பாதிக்கப்பட்டவர்களுக்கு எல்லா உதவிகளையும் செய்யுமாறு முதலமைச்சர் பாபுபாய்படேல் கேட்டுக் கொண்டுள்ளார்.

லிலாப்பூர், அபேபார் என்ற இரு கிராமங்கள் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன.

## சென்னை டெலிபோன்ஸ்

ஏரியா மானேஜர்(தெற்கு) சென்னை டெலிபோன்ஸ் அவர்களால் ஸ்லாட்டட் ஆங்கிள் ராக்குகள் (Slotted Angle Racks) சப்ளை செய்து அமைத்துத் தருவதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் வரவேற்கப்படுகின்றன.

டெண்டர்கள், திரு. கே. கே. கிருஷ்ணமூர்த்தி, ஏரியா மானேஜர் (தெற்கு) 5, கிரீம்ஸ் ரோடு, சென்னை-600 006 அவர்கள் விலாசமிட்டு 28-8-1979 பிற்பகல் 3 மணிவரை பெற்றுக்கொள்ளப்படும். டெண்டர்கள் அதே தினம் பிற்பகல் 4 மணிக்கு திறக்கப்படும்.

டெண்டர் பத்திரங்கள், குறிப்புகள் விவரம், ஆகியவை துணைப்பொறியாளர், டெலிபோன்ஸ், ரிப்பேர் ஒர்க் ஷாப், சூப்பர் B-5, இண்டஸ்டிரியல் எஸ்டேட், கிண்டி, சென்னை-32 அவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

davp - 711 ( 220 )/79